*Nam nāṭu*

*Malar 3, itaḻ 40*

*July 30, 1955*

Record no. 1131

REGD. No. M. 6311 ★ தனி இதழ் 1 அணு ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 55630

# நம் நாடு




The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

மலர் 3] சென்னை: ஆடி 14உ சனி (30—7—55) ★ ★ வெளியூர்: ஆடி 15உ ஞாயிறு (31—7—55) [இதழ் 40

## 23,000 சிறுர் விற்பனை! சிறுமியர் தொகை மட்டும் 7,000!

ஐதராபாத், ஜூலை, 28—

7000 பெண்கள் உட்பட, 23,000 குழந்தைகளை ஐதராபாத்தில் உள்ள பெற்றோர்கள் பணக்காரர்களுக்கு விற்றிருப்பதாக மத்திய சமூக க்ஷேம நல போர்டின், விபசாரத் தடை, சமூக சகாதாரக் குழுத் தலைவி திருமதி ராமாராவ், இன்று, இங்கு குறிப்பிட்டிருக்கிறார். ஐதராபாத்தில் உள்ள பெரிய பணக்காரர்கள் ஒவ்வொருவரும் 30 அல்லது 40 அந்தப்புர அழகிகளை வைத்திருப்பதானது மற்றொரு குறிப்பிடத்தகுந்த விஷயம் என்றும் அவர் கூறியுள்ளார்.

# பெரியார் போராட்டம் வாபஸ்

## காமராஜ் 'திரிசூல்' அறிக்கை

## 'விளக்கம்; வேண்டுகோள்; மிரட்டல்'

### ஆகஸ்டு 'தீ' அணைந்தது!

பெரியார் போராட்டத்தை 'வாபஸ்' வாங்கிக்கொண்டார்.

தேசியக் கொடிகளை நாடெங்கும் ஆகஸ்டு முதல் தேதி கொளுத்துவது என்று போர் முழக்கம் செய்து, அறிக்கைகள் விடுத்து, படை திரட்டி, பாசறைகளுக்குச் சென்று தோழர்களுக்குப் போர்முறை பற்றிய விளக்க உரை தந்துவந்த பெரியார், தமது ஆகஸ்டுப் போராட்டத்தை நிறுத்திவிட்டதாக அறிவித்து விட்டார்.

திராவிட கழகத் தோழர்களும், அனுதாபிகளும் ஆகஸ்டு முதல் தேதி கொடி கொளுத்த வேண்டாமென்று கேட்டுக்கொண்டிருக்கிறார்.

17—6—55 அன்று துவங்கப்பட்டு, நேற்று வரையில் நாடெங்கும் கொதிப்பை மூட்டிவிட்ட, கொடி கொளுத்தும் போர்த் திட்டம், இன்று வாபஸ் பெறப்பட்டிருக்கிறது.

29—6—55 மாலை, சென்னை முதலமைச்சர் காமராசர், ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறார்.

விளக்கம், வேண்டுகோள், மிரட்டல் எனும் மூன்று பகுதிகள் கொண்டதாக அமைந்திருக்கும் அந்த அறிக்கைக்குப் பிறகே, பெரியார் போராட்டம் 'வாபசா'கி இருக்கிறது.

ஆகஸ்டு முதல் தேதி தேசீயக் கொடி கொளுத்தும் போராட்டத்தை எவ்வகையில் நடத்துவது என்பது பற்றிய எழுச்சிதரும் பிரச்சாரக் கூட்டம் 29—6—55 சிதம்பரத்தில் நடைபெற்றது; பெரியார் பேசினார்.

அன்றிரவே பெரியார் அவசர அவசரமாகச் சென்னை வந்து போராட்டத்தை வாபஸ் வாங்கிவிட்டதாக, அறிக்கை, 30-6-55 காலைப் பத்திரிகைகளில் வெளிவரும்படி, அளித்திருக்கிறார்.

*சிதம்பரத்திலிருந்து நள்ளிரவில் சென்னை திரும்பிய பெரியாரை, டாக்டர் வரதராஜுலு நாயுடு சந்தித்தார்.*

*டாக்டர் வரதராஜுலு நாயுடு, அதற்கு முன்தினமே காமராசரைச் சந்தித்துப் பேசினார்.*

"காமராசருடைய அறிக்கையைக் கண்டேன்;

"ஆகஸ்டு முதல் தேதியன்று இந்திய யூனியன் கொடியைக் கொளுத்துவது என்ற திராவிட கழக தீர்மானம் குறித்து, முதன் மந்திரி காமராசர் வெளியிட்டுள்ள அறிக்கையை முன்னிட்டு ஆகஸ்டு முதல் தேதி நடத்த உத்தேசித்திருந்த கொடி கொளுத்தும் கிளர்ச்சியை இதன் மூலம் தற்போதைக்கு நான் 'வாபஸ்' பெறுகிறேன்."

என்று, பெரியார் அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறார்.

விரிவான வேறோர் அறிக்கை தொடரும் என்று தெரிவித்திருக்கிறார்.

காமராசரின் அறிக்கையில்,

### விளக்கம்

"இந்தியை அரசாங்க வேலைகளுக்கு ஏற்றுக்கொள்வது பற்றி பெரும் தவறான கருத்துக்கள் நிலவுவதாகத் தெரிகிறது;

"இந்திய அரசியல் சட்டப்படி, இந்தி மொழிதான் யூனியன் சர்க்காரின் அலுவல் மொழியாக இருக்கும்;

"ஆனால், நாட்டின் எந்த ஒரு பகுதி மக்களின் விருப்பத்திற்கு எதிராகவோ, அல்லது அவர்களின் சம்மதம் பெறாமலோ, சர்க்கார் இந்தி மொழியை எந்த ஒரு பகுதி மக்கள் மீதும் நுழைக்கமாட்டார்கள்;

"ஒரு மாநிலத்தின் அரசாங்க காரியங்கள் அத்தனைக்குமோ அல்லது சிலவற்றிற்கோ உபயோகப்படும்வகையில் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட மொழிகளை ஏற்றுக்கொள்வதற்கு, அந்தந்த மாநில சட்டசபைகளுக்கு, அரசியல் சட்டத்தின்படி போதுமான வழிவகைகள் உள்ளன;

"ஒரு மாநிலத்தில் அதன் அரசாங்க காரியங்களுக்கென இந்தி மொழியைக் கட்டாயமாகப் புகுத்த அரசியல் சட்டத்தில் வழி ஏதும் இல்லை. சட்டசபைகளே இதுபற்றி முடிவு செய்யும்;

(தொடர்ச்சி 4-ம் பக்கம் பார்க்க.)

### 'உண்மையான சோஷலிச கட்சி'

புதுடில்லி, ஜூலை 29—

"'உண்மையான சோஷலிச தத்துவத்'தைக் கொண்ட புது அரசியல் கட்சி இந்த ஆண்டு டிசம்பர் இறுதியிலோ, அல்லது முன்னதாகவோ தோன்றிவிடும்,"

என்று, டாக்டர் ராம் மனோகர் லோகியா பத்திரிகையாளரிடம் தெரிவித்திருக்கிறார்.

### 350 ஆரம்ப ஆசிரியர்கள் வேலைநிறுத்தம்!

### உறுதி மொழியை நிறைவேற்றாத சர்க்காரின் போக்கே காரணமாம்

*மூன்று மாத சம்பளமும், நான்கு மாத பஞ்சப்படியும் தரப்படவில்லையாம்!*

கயா, ஜூலை 27—

இங்குள்ள ஆரம்பப் பள்ளிகளில் வேலை செய்யும் சுமார் 350 ஆசிரியர்கள், வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டிருக்கின்றனராம்.

அவர்கள், தங்களுக்குக் கடந்த மூன்று மாத சம்பளமும், மற்றும் நான்கு மாத பஞ்சப்படி முதலியனவும் தரப்படாமல் பாக்கியிருப்பதாகவும், அதனைத் தருமாறு வற்புறுத்துவதற்காகவே வேலை நிறுத்தத்தில் ஈடுபடுவதாகவும் தெரிவித்திருக்கின்றனர்.

அவர்கள் கடந்த பிப்ரவரியில் இம்மாதிரி வேலை நிறுத்தம் ஒன்றைத் துவங்கினர். மாநில அரசாங்கம் அவர்களின் கோரிக்கைகளைக் கவனித்து குறைகளைத் தீர்ப்பதாக வாக்குறுதி அளித்ததின் பேரில் வேலை நிறுத்தத்தைக் கைவிட்டனர்.

ஆனால், இது நாள்வரை சர்க்கார் தாங்கள் தந்த உறுதி மொழியை நிறைவேற்றாதது, மறுபடியும் வேலை நிறுத்தத்தில் ஈடுபடுமாறு ஆசிரியர்களைத் தூண்டியிருக்கிறது.

இப்போது நகரில் உள்ள 75 நகரசபை ஆரம்பப் பள்ளிகளுள், 74 பள்ளிகளில் வேலை நிறுத்தம் பூரணமாக நடைபெறுகிறதாம்.

ஆசிரியர் சங்கத்தில் பணிபுரியும் ஆசிரியர்களை மாற்றுதல், ஆசிரியர் சங்கக் கூட்டங்களுக்குச் செல்லும் ஆசிரியர்களிடம், விசாரணை விளக்கம் கேட்டல், நான்கு ஆசிரியர்களைத் தற்காலிகமாக நீக்கியது போன்ற நகரசபைத் தலைவரின் நடவடிக்கைகளும், ஆசிரியர்களின் வேலை நிறுத்தத்திற்குக் காரணமாக அமைகிறதாம்.

### பிரிட்டிஷ் விமானம் விழுந்து 4 பேர் பலி

[illegible]ர்தாம்டன், ஜூலை 29—

பிரிட்டனின் பிரம்மாண்டமான புதிய வெடிகுண்டு விமானங்களில் ஒன்று, அருகில் உள்ள விட்டலிங் விமான நிலையத்திலிருந்து இன்று புறப்பட்டதும் தரையில் விழுந்து நொறுங்கியது; விமானத்திலிருந்த 4 பேரும் கொல்லப்பட்டனராம்.

### திரு—கொச்சி அரசியல் மீண்டும் நிலைகுலைகிறது?

### பனம்பள்ளி மந்திரி சபை மீது நம்பிக்கை இல்லாத் தீர்மானம்!

*ஐக்கிய முன்னணியுடன் புரட்சி சோஷலிஸ்டு கூட்டு!*

சென்னை, ஜூலை 30—

திரு. கொச்சி மாநில சட்ட சபையின் அடுத்தக் கூட்டத்தின்போது, சட்டசபை இடதுசாரி ஐக்கிய முன்னணியுடன் சேர்ந்து திரு. கொச்சி மாநில புரட்சிகர சோஷலிஸ்டு கட்சி, திரு—கொ. மாநிலத்தின் ஆட்சிபீடத்திலமர்ந்துள்ள பனம்பள்ளி கோவிந்தமேனன் தலைமையிலுள்ள அமைச்சரவைமீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவரும்.

இந்தத் தகவலை, நேற்று சென்னை வந்திருந்த திரு—கொ மாநில புரட்சிகர சோஷலிஸ்டுக் கட்சியின் தலைவரான ஸ்ரீ கண்டன் நாயர் நிருபர்களிடை பேசுகையில் வெளியிட்டுள்ளார்.

அமைச்சரவைமீது தமது கட்சி கொண்டுவர இருக்கும் நம்பிக்கையில்லாத் தீர்மானத்திற்கு, சட்டசபையிலுள்ள சுயேச்சை உறுப்பினர்களின் ஆதரவும் கிடைக்குமென தாம் நிச்சயமாக நம்புவதாகவும் அவர் தெரிவித்திருக்கிறார்.

திரு. கொச்சி மாநில மக்கள் அனைவரும், மாநில காங்கிரஸ் சர்க்கார், வர்த்தக, தொழிற் சங்கப் பிரச்சினைகளில் நடந்துகொண்டுள்ள முறைகளில் மிகுந்த அதிருப்தி கொண்டுள்ளனர் என்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

### பாதரசம் திருடு போயிற்று!

சென்னை—ஜார்ஜ் டவுன் கோவிந்தப்ப நாய்க்கன் தெருவில் உள்ள ஒரு கிடங்கிலிருந்து, ரூ. 2,500 மதிப்புள்ள 2 ஜாடி பாதரசம் நேற்று திருடுபோய் விட்டதாகக் கூறப்படுகிறது.

### 'கள்ளச் சாராயத்தால் கோடிக்கணக்கான ரூபாய் இலாபம்'

### 'மதுவிலக்கிற்கு கிராம அதிகாரிகளும் எதிராக இருக்கின்றனர்'

### திட்டக் குழுவிடம் ஆந்திர அரசாங்கம் தந்த விளக்கம்

"மதுவிலக்குச் சட்டத்தைச் செயலாற்றுவதில் பொதுமக்களுடைய ஒத்துழைப்பு அறவே இல்லை. மது விலக்கிற்கு கிராம அதிகாரிகள்கூட எதிராக இருக்கிறார்கள் எனக் கூறப்படுகிறது. கிராம அதிகாரிகள் போக்கே இதுவானல், பொதுமக்களைக் குறித்து கூறவே தேவையில்லை.

"ஆற்றங்கரைகளிலும், காடுகளிலும், அரசாங்கப் புறம்போக்கு நிலங்களிலும் கள்ளச்சாராயம் தயாரிக்கப்படுவதுடன், வீடுகளில் தயாரிக்கப்படுவதும் மிகமிகச் சாதாரணமாக இருந்துவருகிறது."

—இவ்வாறு, மதுவிலக்கின் நிலைமை குறித்து, திட்டக் குழுவிற்குத் தாம் அனுப்பிய அறிக்கையில், ஆந்திர அரசாங்கம் குறிப்பிட்டிருக்கிறது.

'கோடிக்கணக்கானரூபாய் இலாபம் தரக்கூடிய, இலாபகரமான தொழிலாக கள்ளச் சாராயத் தயாரிப்புத் தொழில் இருந்து வருவது; பொது மக்களிடம் ஆதரவு இல்லாமல் இருப்பது; அதிகாரிகளின் கெடுபிடியால் ஏற்படக்கூடிய மக்களின் மன உணர்வு; பலம் பொருந்திய கள்ளச் சாராயத் தயாரிப்பு அமைப்பின் துணையுடன் மதுவிலக்கை எதிர்க்கும் சமுதாய எதிரிகளால் ஏற்படும் அச்சம்; மற்றச் சட்டங்களுக்கும் மதுவிலக்குச் சட்டத்திற்கும் இயல்பாக இருந்துவரும் வேற்றுமை;

(4-ம் பக்கம் பார்க்க)

Roja Muthiah Research Library
3rd Cross Road, C P T Campus
Taramani, Chennai 600 113.

Best copy available.

நம் நாடு
தி.மு.க.தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்
சென்னை 30—7—'55 சனி

# விவேகமானதுதானா?

எதிரி வீதி வழியே வருகிறான்—ஏதோ காரியத்தைக் கவனிப்பதற்காக; கண்டு விட்டான் இவன்; 'எதிரி மேற்கொள்ளவிருக்கும் காரியம் குட்டிச்சுவராய் முடிய வேண்டும்,' என்று எண்ணுகிறான்; 'எதிரிக்கு ஏதேனும் சகுனத் தடை ஏற்பட்டால், அவன் முயற்சிக்கும் காரியம் கைகூடாது போகும்,' என்று நம்புகிறான்; எதிரிக்கு சகுனத் தடை உண்டாக்க என்ன செய்வது என்று யோசிக்கிறான்; யோசனையின் விளைவாக தன் மூக்கையே அறுத்துக்கொண்டு, எதிரிக்கு அபசகுனக் காட்சி தந்தான் ஒருவன்!

இப்படி ஒரு பழமொழிக் கதையை, நாட்டிலே சொல்லுவார்கள்.

'எதிரியின்மீது தனக்குள்ள வெறுப்பைக் காட்ட—தனக்குள்ள பகைமையின் அளவைக்காட்ட தன் மூக்கையே மூளியாக்கிக் கொண்டான்,' என்ற அந்தக் கதைக்கு இலக்கணமாய் விளங்குகிறார்—சென்னையிலிருந்து சென்று இந்தியப் பேரரசின் வர்த்தக, தொழில் உற்பத்தி இலாகாக்களின் அமைச்சர் பதவிப் பொறுப்பேற்றிருக்கும் வர்த்தக வித்தகர் டி. டி. கிருஷ்ணமாச்சாரியார்!

அண்மையில் அவர் சென்னை மாநிலச் சுற்றுப்பயணம் வந்திருந்தபோது, நெய்வேலி நிலக்கரிச் சுரங்கம் பற்றியும், சேலத்தில் இரும்பு உருக்குத் தொழிற்சாலை துவங்குவது பற்றியும் திருவாய் மலர்ந்தருளிய கருத்துக்களை மக்கள் அறிந்திருக்கின்றனர்.

சேலத்திலே புதிதாக இரும்பு உருக்குத் தொழில் துவங்குவது மட்டுமல்ல தனக்குப் பிடிக்காதது—நெய்வேலியில் கிடைக்கும் பழுப்பு நிலக்கரியைத் தோண்டுவதற்காக, வேண்டா வெறுப்புடன், 'இனியும் துவங்காவிட்டால் தொல்லைகள் தொடரும்' என்ற அச்சத்தால், காலங்கடந்தேனும் இந்தியப் பேரரசு மேற்கொண்டிருக்கும் பரிசோதனை முயற்சி கூடத்தான் தனக்குப் பிடிக்காதது—என்று பட்டவர்த்தனமாகக் கூறின, அவரது அன்றைய வாசகங்கள்!

"சேலத்திலா? — இரும்புத் தொழிற்சாலையா?—நிலக்கரி எங்கே கிடைக்கிறது?"

"சேலத்து இரும்பு எதுக்கும் பயனற்றது; அதைத் தோண்டி எடுப்பதால் இலாபமேதுமிருக்கப் போவதில்லை.

"இரும்பு உருக்குத் தொழிற்சாலைகள் வெறும் பகட்டான தொழில்கள்; பலருக்கு வேலை தரக்கூடிய தொழில்களல்ல."

என்ற டி. டி. கே-யின் வாசகங்கள், தென்னாட்டில் ஒரு இரும்பு உருக்குத் தொழிற்சாலை துவங்கப்படுவதில் அவருக்கு சிறிதும் விருப்பமில்லை என்ற உண்மையைத் தெளிவாக்கவில்லையா?

சேலத்து மலைகளில் கிடைக்கும் இரும்புக் கனிகளின் தரம் குறித்து 'நற்சாட்சி' வழங்காத நியமிக்கப்பட்ட வெளிநாட்டு நிபுணர் குழுக்கள் எதுவுமே கிடையாது. அப்படியிருக்க, இந்த மகானுபாவர், 'சேலம் இரும்பு கவைக்குதவாதது' என்று கூற முற்படுவானேன்?

'நெய்வேலியில் புதைந்து கிடக்கும் பழுப்பு நிலக்கரி தோண்டி எடுக்கப்பட்டால், தென்னாட்டிலேயே ஒரு பெரும் தொழில் புரட்சி ஏற்பட வழியுண்டு,' என்பது, அந்த நெய்வேலி நிலக்கரி பற்றி ஆராய்ச்சி நடத்திய நிபுணர் குழுக்கள் பலவற்றின் ஒருமுகமான முடிவு.

ஆனாலும், 'நெய்வேலி நிலக்கரியைத் தோண்டி எடுக்கும் வேலை வீணானது; அந்த வேலைக்குச் செலவிடும் 60 கோடி ரூபாயும் தண்டம்; எதற்கும் பயன்தரப் போவதில்லை,' என்று, இந்த வர்த்தக வித்தகர் விண்ணாணம் பேசினார். அது ஏன்?

'நெய்வேலி நிலக்கரி தோண்டி எடுக்கப்படுவதால், தென்னாட்டில் தொழில் வளம் பெருக வழி பிறக்கும்,' என்று, நிபுணர்கள் கூறிய பிறகும், 'அதுஉருப்படாது' என்று ஆரூடம் கூறினாரே, இந்த ஆச்சாரியார்—அது ஏன்?

இரும்பு உருக்கு உற்பத்தி கூட, உற்பத்தி இலாகாவின் பொறுப்புகளுள் உள்ளடங்கிக் கிடந்தது. அந்த உற்பத்தி இலாகா மந்திரியாக கே. சி. ரெட்டி என்பார் இருந்துவருகிறார்.

இரும்பு, உருக்கு உற்பத்தி பொறுப்பு, என்ன காரணத்திற்காகவோ தம் கைக்கு மாற்றப்பட வேண்டும் என்று விரும்பியிருக்கிறார், டி. டி. கே.

'இந்தச் சிக்கலுக்குத்தானே அவர், இராஜிநாமா நாடகம் நடத்தினார்,' என்று டில்லி வட்டாரத்தினர் பேசிக்கொள்கிறார்கள்.

எப்படியோ, இவர் கைக்கு, இரும்பு, உருக்கு உற்பத்திப் பொறுப்பு மாற்றப்பட்டது; புதிய இலாகாவையே அதற்கென உருவாக்கி, அந்த இலாகாவை நிர்ணயிக்கும் பொறுப்பையும் இவர் பெற்றுக்கொண்டிருக்கிறார்.

இப்போது, உற்பத்தி இலாகா வட்டாரத்தினர், 'நெய்வேலியில் கிடைக்கும் நிலக்கரியைத் தோண்டச் செலவிடப்படும் தொகையான 60 கோடி ரூபாயும் வீண்,' என்று கூறுகிறார்கள்.

'அந்தக் கூற்று முற்றிலும் பொய்யானது; நெய்வேலி பலன் தரக்கூடிய சுரங்கம் தான்; நிலக்கரி தோண்டும் வேலையைத் துரிதமாக்க நடவடிக்கைகள் மேற்கொள்ளவிருக்கிறோம்,' என்று, துவங்கப்படவிருக்கும் வேலை பற்றிய விபரங்களுடன் கூறி, டி. டி. கே., தமிழகம் வந்து சென்றபோது, நெய்வேலி பற்றிக் கூறிய கருத்துக்களை மறுத்துரைத்திருக்கின்றனர்.

டி. டி. கே., தான் நிர்வகிக்க விரும்பும இலாகா இன்னொரு மந்திரியிடம் இருந்தது என்பதற்காக, அந்த மந்திரியின் நிர்வாகம் மேற்கொள்ளும் நடவடிக்கைகளை — 'இது சொள்ளை; இது சொத்தை; அது சோடை; இது உருப்படாது; அது வீணான முயற்சி'—என்றெல்லாம் பேசிவந்திருக்கிறார் என்றுதானே தெரிகிறது?

இந்த நிகழ்ச்சிகள் — எதிரிக்கு சகுனத் தடை உண்டாக்க தன் மூக்கையே அறுத்துக்கொண்ட மனிதனுடன் டி. டி. கே., ஒப்பிடப்படக்கூடியவர்தான் — என்பதைத்தானே சொல்லுகின்றன?

உற்பத்தி இலாகா மந்திரியிடம் தன் சுயநலத்திற்காக விரோதம் கொண்டிருந்ததற்காக, தான் எந்தத் தொகுதியிலிருந்து மக்கள்சபை உறுப்பினராகி, மந்திரியாகவும் வீற்றிருக்கிறாரோ, அந்த சென்னை மாநிலத்தின் தொழில்களையும், அவற்றிற்கான மூலப் பொருள்களையுமே குறைத்துப் பேசுவதா?

எதிரிக்கு சகுனத் தடை விதிக்க தன் மூக்கை அறுத்துக்கொள்வது விவேகமானதுதானா?

## ஆரம்ப ஆசிரியர்கள் பட்டினிப் போர்

### வேலை கோரி நடவடிக்கை

சபார்கந்தா என்னுமிடத்தைச் சேர்ந்த சுமார் 25 ஆரம்பப்பள்ளி ஆசிரியர்கள் ஹிமாத் நகரில் உள்ள மாவட்டக் கழக நிர்வாக அதிகாரியின் அலுவலகத்தின் முன் பட்டினிப் போர் துவங்கியுள்ளனர் எனத் தெரிகிறது

அவர்கள் இந்த உண்ணாவிரதத்தை மேற்கொண்டதற்குக் காரணம், 'தங்களுக்கு வேலை கிடைக்கவில்லை—மாவட்ட அதிகாரிகள் வேலை தேடித் தரவேண்டும்' என்று கோருவதற்காகத் தானாம்!

சர்க்கார் மானியம் பெற்று தாங்கள் நடத்திக்கொண்டிருந்த பள்ளிக்கூடங்கள் பலவற்றை தல நிர்வாகக் கழகத்தினர் மேற்கொண்டுவிட்டதினால், வேலை இழந்த பல ஆசிரியர்களுள் அவர்களும் சிலராம்.

உண்ணாவிரதத்தைத் துவக்குமுன் அவர்கள் ஹிமாத் நகரின் முக்கிய தெருக்கள் வழியாக ஊர்வலம் வந்து, தங்களின் கோரிக்கைகளுக்காக குரல் எழுப்பியிருக்கின்றனர்.

பட்டினிப் போர் துவக்குவதென ஒரு வாரத்திற்கு முன் முடிவு செய்த இவர்கள் மாநிலக் கல்வி மந்திரியான தின்கர் ராவ் தேசாயிக்கு, தங்கள் முடிவை அறிவித்திருந்தனராம்.

வட்டார கல்வி அதிகாரியுடன், மாவட்டக் கழக நிர்வாக அதிகாரி இதுபற்றித் தொடர்புகொண்டிருப்பதாகத் தெரிகிறது.

## கிராமத்தையே அழிக்கும் செல்லுப் பூச்சிகள்!

வட இத்தாலியிலுள்ள ஒரு கிராமம் முழுவதும் செல்லுப் பூச்சிகளால் அழிக்கப்பட்டு வருகிறதாம்!

அந்தக் கிராமத்திலுள்ள சுமார் 400 வீடுகளிலும் உள்ள எல்லா உத்தரங்களையும், மரத்தூண்களையும் செல்லுப் பூச்சிகள் அழித்துத் தள்ளிவிட்டனவாம்! மேற்கொண்டு அவைகள் இப்போது, வீடுகளின் கதவுகளையும், பலகணிகளையும் 'சாப்பிட' ஆரம்பித்துள்ளனவாம்!

அக்கிராம மக்கள் சிலர், எங்கே தங்கள் வீடுகள் சரிந்து விழுந்து விடுமோ என்று அஞ்சி, திறந்த வெளிகளில் சென்று வசிக்கின்றனராம்!

செல்லுப் பூச்சிகளை அழிக்க, வெளியிலிருந்து நிபுணர்கள் அழைக்கப்பட்டுள்ளனர் என்றும் கூறப்பட்டிருக்கிறது.

# நெய்வேலியின் பொன்னான உபயோகங்கள்

## இந்தியப் பேரரசுக்கு நிபுணர் குழு தரும் விவரங்கள்

புதுடில்லி, ஜூலை 29—

'தென்னாற்காடு மாவட்ட நெய்வேலி பழுப்பு நிலக்கரியை வர்த்தக ரீதியில் பயன்படுத்த முடியும்,' என்று, இத்திட்டம் பற்றி ஆலோசனை கூற நியமிக்கப்பட்ட அயல்நாட்டு கம்பெனி, மத்திய சர்க்காருக்கு அறிவித்திருக்கிறது.

இக்கம்பெனி நிபுணர்களின் திட்டப்படி வருடம் 30 லட்சம் டன் பழுப்பு நிலக்கரி தோண்டியெடுக்கலாம்; இதை உபயோகித்து, வருடம் 11 லட்சம் கிலோவாட் மின்சாரம் உற்பத்தி செய்யலாம்; மேலும், வருடம் 2 லட்சம் டன் அம்மோனியம் சல்பேட் உற்பத்தி செய்யலாம்; வீடுகளுக்கு எரிபொருளாக உபயோகிக்க 7 லட்சம் டன் நிலக்கரி தயாரிக்கலாம்;

இத்திட்டப்படி இங்கு கனிப் பொருள் எடுக்க தொழிற்சாலையொன்றும், மின்சார உற்பத்தி நிலையமும், உர உற்பத்தி தொழிற்சாலையொன்றும் கட்டவேண்டும் இவைகள் அநேகமாக அடுத்த ஐந்தாண்டுத் திட்டத்தில் இடம்பெறலாம்; இருந்தாலும் இவைகள் படிப்படியாகவே நிறைவேற்றப்படலாம்.

மத்திய சர்க்கார் உற்பத்தி இலாகா பிரதம எஞ்சினீயர் கனிப்பொருளை வெட்டியெடுப்பது எவ்வாறு என்று பூர்வாங்க ஆராய்ச்சிகள் நடத்திவருகிறார். இவ்வாண்டு முடிவுக்குள் இவர் அறிக்கை சமர்ப்பிப்பார் என்று தெரிகிறது.

தற்போதுள்ள நிதானப்படி இத்திட்டம் நிறைவேற ரூ 60 கோடி பிடிக்குமென்று தெரிகிறது.

★

### பரிசோதனைக்கு ரூ. 1-கோடி செலவு?

நெய்வேலி பழுப்பு நிலக்கரி சுரங்கத்திலிருந்து தண்ணீரை இறைப்பதற்கான பம்பு செட்டுகளுக்கு ரூ 40 இலட்சம் செலவாகுமென எதிர்பார்க்கப்படுகிறதாம்.

சென்னை சர்க்கார் நடத்திய பரிசோதனைகள் உட்பட மொத்த பூர்வாங்க பரிசோதனைகளுக்கு ரூ. 1-கோடி செலவாகுமென்று மதிப்பிடப்படுகிறதாம்.

நெய்வேலி திட்ட சோதனைகளுக்கு ரூ. 60 கோடி விரயமாக்கப்பட்டதாக வெளியாகும் செய்திகளுக்கு ஆதாரமே இல்லை என்று உற்பத்தி இலாகா வட்டாரத்தினர் மறுத்தனராம்.

பூர்வாங்க ஆராய்ச்சி வேலைகளின் பலன்கள் தெரிந்த பிறகே ரூ. 58 கோடி திட்டம் மேற்கொள்ளப்படுமாம்.

பழுப்பு நிலக்கரியை வெட்டி எடுப்பது, மின்சார சக்தி உற்பத்தி, இரசாயன உர உற்பத்தி, வீட்டு உபயோகத்திற்கு பழுப்பு நிலக்கரிக் கட்டிகள் தயாரிப்பு ஆகியவை கொண்ட இணைக்கமான திட்டத்திற்கு ரூ 58 கோடி செலவாகுமென்று தொழில் நுணுக்க ஆலோசகர்கள் கூறியுள்ளனராம்.

அடுத்த ஆண்டு ஆரம்பத்தில், நிலக்கரி வெட்டி எடுப்பதற்கான இயந்திரங்களும், மற்ற சாதனங்களும் வரவழைக்க ஆர்டர்கள் கொடுக்க முடியுமென்று சர்க்கார் எதிர்பார்க்கிறதாம்.

பழுப்பு நிலக்கரிச் சுரங்கத்தில், தண்ணீர் இறைக்கும் சோதனைகளை முழு அளவில் நடத்துவதற்கு, மத்திய ஆட்சியினர், ஏற்கனவே கொடுக்கப்பட்டுள்ள ஏராளமான 'பம்பு'களுடன், மேலும் 16-பம்புகளுக்கு 'ஆர்டர்' கொடுத்துள்ளதாகக் கூறப்படுகிறது.

## மத்திய பிரதேசத்தில்..

### நிலக்கரி தோண்டுதல் துவங்கிவிட்டதாம்!

புதுடில்லி, ஜூலை 27—

மத்தியப் பிரதேசத்தைச் சேர்ந்த கோர்பா பிரதேசங்களில் உள்ள நிலக்கரி வயல்களிலிருந்து நிலக்கரியைத் தோண்டி எடுப்பதற்கான ஆரம்ப வேலைகளனைத்தும் துவங்கிவிட்டன என்று கூறப்பட்டிருக்கிறது.

இந்த வேலையை மத்தியப் பிரதேச மாநில சர்க்காரும், இந்திய சர்க்காருமாகச் சேர்ந்து நடத்தத் தீர்மானித்துள்ளனராம்.

மேற்குறிப்பிட்ட கோர்பா நிலக்கரி வயல்களை முற்றிலுமாகப் பயன்படுத்துவதாக இருக்குமானால் ஆண்டொன்றுக்கு சுமார் 40-லட்சம் டன் நிலக்கரி வரையிலுங் கிடைக்கலாம் என்று எதிர்பார்க்கப்படுவதாகவும் கூறப்பட்டுள்ளது.

இத்தத் திட்ட வயல்களுக்கு அருகிலேயே பிலாய் எஃகு உற்பத்தித் தொழிற்சாலையும் அமைந்துள்ளது.

அந்த பிலாய் எஃகு உற்பத்தித் தொழிற்சாலைக்கும், ஒரிசாவிலுள்ள ரூர்கேலா எஃகு உற்பத்தித் தொழிற்சாலைக்கும் இந்த நிலக்கரித் திட்ட வயல்கள் ஓரளவு நிலக்கரியை விநியோகிக்கும் என்றும், அது மட்டுமன்றி அப்பகுதியிலுள்ள இரயில்வேக்களின் தேவைகளுக்கும் அதிலிருந்து நிலக்கரி விநியோகம் செய்யப்படலாம் என்றும் கூறப்பட்டிருக்கிறது.

இந்திய சர்க்காரின் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நிலக்கரி உற்பத்தியை விரிவுபடுத்தும் முக்கியமான திட்டங்களுள் கோர்பா நிலக்கரி வயல் திட்டமும் ஒன்றாகக் கருதப்படும் என்றும் தெரியவருகிறது.

தற்போது, இத்திட்டத்தின் ஆரம்ப வேலைகளாக, எஞ்சினீயர்களையும், மற்றும் சிப்பந்திகளையும் கொண்ட ஒரு 'முன்னோடிக் குழு' பல இடங்களில் பூமியைத் தோண்டும் (போரிங்) வேலைகளில் ஈடுபட்டுள்ளதாக அறிவிக்கப்பட்டிருக்கிறது.

விரைவில் இது சம்பந்தமான விரிவான திட்டம் தயாரிக்கப்படும் என்றும் கூறப்பட்டிருக்கிறது.

## தென்னாட்டில் சுண்ணாம்புக் கல் படிவம்

### இராமேசுவரத்திற்கு அருகில் கண்டுபிடிப்பு

சென்னை மாநிலத்தில், இராமநாதபுரம் மாவட்டத்தில் இராமேசுவரத்துக்கு அருகில், ஒன்றரை சதுர மைல் பரப்பளவு உள்ள பிரதேசத்தில் கடல் சுண்ணாம்புக் கற்கள் கொண்ட சமீப காலத்திய படிவமொன்று இருப்பது கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது என்று மக்கள் சபையில் அறிவிக்கப்பட்டுள்ளது.

இந்தப் படிவத்திலிருந்து சிமின்ட் உற்பத்திக்கு ஏற்ற சுண்ணாம்புக் கற்கள் மொத்தம் சுமார் 50 இலட்சம் டன் கிடைக்குமென்றும், சுண்ணாம்புக் கற்கள் மேட்டுப் பாங்காக அமைந்துள்ள—மூன்று அடியிலிருந்து பத்து அடிவரை பருமன் உள்ள பாறைத் தொடர்களில் கிடைக்கின்றனவென்றும், சுண்ணாம்புக் கற்கள் நல்ல தரமுள்ளதாக இருப்பதாகவும் ஆராய்ச்சிகளிலிருந்து தெரிய வந்திருக்கிறதாம்.

இந்த சுண்ணாம்புக் கற்கள், 'பிளீச்சிங் பவுடர்' அல்லது, 'கால்ஷியம் கார்பைட்' உற்பத்திக்கான சுண்ணாம்புக் கல்லுக்கு நிர்ணயிக்கப்பட்டுள்ள தரத்துக்குச் சமமானதாக இல்லாதிருந்தபோதிலும், சிமின்ட் உற்பத்திக்கு ஏற்றதாக உள்ளதென்றும் குறிப்பிடப்பட்டது.



# கனம் காமராசரைவிட பனம்பள்ளி மேல்!

## தி. த. நா. கா. வழக்குகளை வாபஸ் பெற யோசனையாம்!

புதுடில்லி, ஜூலை 29—

தி. த. நா. காங்கிரஸ் வழக்குகள் விரைவில் வாபஸ் வாங்கப்படலாம் என்று இங்கு வந்திருக்கும் திரு-கொச்சி முதன் மந்திரி பனம்பள்ளி கோவிந்த மேனன் பத்திரிகை நிருபரொருவரிடம் குறிப்பிட்டாராம்.

'விரைவில்' என்று குறிப்பிடுவதை, எவ்வளவாகக் கருதலாம்—என்று கேட்டதற்கு, அவர், வழக்குகள்குறித்து சர்க்கார் யோசனை செய்து கொண்டிருக்கிறதென்றும், இதுவரையிலும் எந்தவித முடிவுக்கும் வரவில்லை என்றும், விரைவில் முடிவுக்கு வரலாமென்றும் கூறினாராம்.

'ஆகஸ்டு 15-ந் தேதி வழக்குகள் வாபஸ் வாங்கப்படுமா?'—என்று மீண்டும் கேட்டதற்கு, அவர் எதுவும் பதில் சொல்லவில்லையாம். பதில் சொல்லாமலிருந்தாலும், அவர் முகபாவனையிலிருந்து, 'ஒருவேளை அவ்விதமும் நடைபெறக் கூடுமோ' என சந்தேகப்படவும் நியாயமிருக்கிறதாம்.

## சென்னை நகரில் 310 சேரிகள்

### சீர்திருத்தத் திட்டம்

மத்திய சர்க்கார் அனுமதிக்க வேண்டுமாம்

சென்னை, ஜூலை 28—

சென்னை நகரில் மொத்தம் 310 சேரிகளிருக்கின்றன.

இந்த சேரிகளை பல துறைகளில் திருத்தியமைப்பதற்காக, சென்னை சர்க்கார் அலுவலகத்தில், மந்திரி பரமேஸ்வரன் தலைமையில், பலதுறை அதிகாரிகளையும் கொண்ட மாநாடு ஒன்று நடைபெற்றது

சேரி சீர்திருத்தத் திற்காக, இடங்கள் வாங்குவதற்கென சுமார் ரூ. 4-கோடிக்கு திட்டம் தயாரிக்கப்பட்டுள்ளதாகவும், இரண்டாம் ஐந்தாண்டுத்திட்டம் வகுக்கப்பட்டு, மத்திய சர்க்கார் அங்கீகரித்தபின் இறுதி நிலை தெரியுமென்றும் மந்திரி தெரிவித்திருக்கிறார்.

## சென்னை நகரசபை பள்ளிகளில்......

### மாணவர் எண்ணிக்கை அதிகரிப்பு

சென்னை நகரசபைப் பள்ளிக்கூடங்களில் அனுமதிக்கப்பட்டிருக்கும் மாணவர்களின் எண்ணிக்கை சென்ற ஆண்டினைக் காட்டிலும் 6,000 அதிகரித்திருக்கிறது.

இலவச ஆரம்பக் கல்வி பெறும் குழந்தைகளின் மொத்த எண்ணிக்கை 86,119.

ரூ 35-க்கும் குறைவாக மாதச் சம்பளம் பெறும் பெற்றோர் அனுப்பும் குழந்தைகளுக்கு பகல் உணவு இலவசமாக அளிக்கப்படுகிறது என்றும், சுமார் 13,000 குழந்தைகள் பலன் பெறுகின்றனர் என்றும் தகவல் சேகரிக்கப்பட்டிருக்கிறது.

உடை வசதி இல்லாத ஏழைக் குழந்தைகளுக்கு இவ்வசதி அளிப்பதற்காக சென்னை நகரசபைத் தலைவர் எம். ஏ. சிதம்பரம் இதற்கெனவே ஒரு நிதி ஆரம்பித்து ஆடைகள் வழங்கத் திட்டமிட்டுள்ளார் என்றும் தெரிகிறது.

## இரு புதிய மருத்துவக் கல்லூரிகள்

சென்னை மாநிலத்தில், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் இரண்டு புதிய மருத்துவக் கல்லூரிகளைத் திறக்க மாநில சர்க்கார் திட்டமிட்டுள்ளனர் எனத் தெரிய வருகிறது. ஆயினும் மேற்படி கல்லூரிகள், மாநிலத்தில் எந்தெந்த இடங்களில் நிறுவப்படும் என்று திட்டவட்டமாகத் தெரியவில்லை என்றும் கூறப்பட்டிருக்கிறது.

எனினும், மதுரை நகரில் ஒரு மருத்துவக் கல்லூரி ஏற்கனவே இருப்பதால் அங்குள்ள மருத்துவக் கல்லூரி மாணவர்கட்கு படிப்பிற்கான வசதி இருக்கும்பொருட்டு மூளைக் கோளாறு மருத்துவவிடுதி ஒன்று திறக்கப்படலாம் என்றும் அறிவிக்கப்பட்டிருக்கிறது.

மேலும், சென்னை நகரிலும், கோழிக்கோட்டிலுமுள்ள இரண்டு மூளைக் கோளாறு மருத்துவ விடுதிகள் அபிவிருத்தி செய்யப்படலாம் என்றும் கூறப்பட்டுள்ளது.

## கோவில்பட்டி தி. மு. கழக பொதுக் கூட்டம்

கோவில்பட்டி அழகிரி சதுக்கத்தில் 24—7—55 இரவு 7 மணிக்கு தோழர் எஸ். கே. டி. சாமி தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. அதுபோது தோழர்கள் மு. அருணாசலம், எஸ். கலிங்கன், டபிள்யூ. டி. துரைசாமி, மதுரை எஸ். முத்து ஆகியோர் பேசினர்.

கூட்டத்தில், தோழர் வள்ளிமுத்து மீது போடப்பட்ட நம்பிக்கையில்லாத் தீர்மானம் பற்றி விளக்கப்பட்டது. 1950 ஆகஸ்டில், கோவில்பட்டியில் நடைபெற்ற நெல்லை மாவட்ட தி. மு. கழக மாநாட்டின் வரவு-செலவு கணக்கு வாசித்துக் காட்டப்பட்டு, விளக்கப்பட்டது. இறுதியில் செயலாளர் சின்னசாமி நன்றிகூற கூட்டம் இரவு 10 மணிக்கு முடிவுற்றது.

# மலேயாவின் முதல் தேர்தல்கள்

## 'மூவர் கூட்டணி'க்கு வெற்றி!

கோலாலம்பூர், ஜூலை 28—

மலேயாவில் முதன் முறையாக தற்போது நடைபெற்றுள்ள தேர்தலில், மலேயா, சீனா, இந்தியா ஆகியவற்றின் நிறுவனங்களைச் சேர்ந்த முக்கூட்டணிக்குப் பெரும்பான்மையான வெற்றி கிடைத்துள்ளதாக அறிவிக்கப்பட்டுள்ளது

கிடைத்துள்ள புள்ளி விவரங்கள்படி, மலேயா சட்டசபையிலுள்ள மொத்தம் 52 இடங்களில் 42 இடங்களை முக்கூட்டணி கைப்பற்றியுள்ளதாம்!

இந்த முக்கூட்டணியின் தலைவரான மலேயா இளவரசர், மலேயா பிரதம அதிகாரியைச் சந்தித்துவிட்டு பின்னர் சர்க்கார் அமைப்பார் என்று எதிர்பார்க்கப்படுகிறதாகவும் கூறப்பட்டிருக்கிறது.

இம்முக்கூட்டணி, பிரிட்டனிடமிருந்து மலேயா விடுதலை பெற வேண்டுமென்று, உடனடியாகத் தனது கோரிக்கையை வற்புறுத்தும் என்றும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

தங்களது வெற்றி குறித்துப் பேசிய முக்கூட்டணித் தலைவர், தாங்கள் பெற்ற வெற்றி, மக்களின் சுதந்திர ஆர்வத்தை'யே காட்டுவதாகும் என்றும், மலேயா சுதந்திரப் பிரச்சினையைப் பொறுத்தே தங்களுக்கு வெற்றி கிடைத்துள்ளதென்பதை பிரிட்டிஷ் சர்க்கார் புறக்கணித்து ஒதுக்கித் தள்ள முடியாதென்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

புதிய மந்திரி சபையில், மலாயா பிரதம அதிகாரியின்கீழ் 9 அமைச்சர்கள் அடங்கியிருப்பர் எனவும் கூறப்பட்டுள்ளது.

'எவ்விதத்திலும் 1959-ம் ஆண்டிற்குள்ளாகவே மலாயா 'சுதந்திரம்' பெற்றாக வேண்டும்' என்பதே மேற்படி முக்கூட்டணியின் கொள்கையாகும்.

தேர்தலில் வெற்றி கண்டுள்ள முக்கூட்டணி, கம்யூனிஸ்டுக் கைதிகளுக்கு மன்னிப்பு தந்து, அங்கு பிரகடனப்படுத்தியுள்ள அவசர நிலையையும் ரத்து செய்துவிட வேண்டுமென்றும் தெரிவித்திருக்கிறதாம்.

## சர்க்கார்ஊழியர்களுக்கென தனி காசநோய் விடுதிகள்

சென்னை, ஜூலை 27—

சர்க்கார் கெஜட் பதிவு பெறாத சர்க்கார் அதிகாரிகளுக்கும், ஸ்தல ஸ்தாபன ஊழியர்கட்கும் சிகிச்சை செய்வதற்காக சர்க்காரிடம் மானியமாகச் செலவுத் தொகை பெற 7 தனிப்பட்ட க்ஷயரோய் சிகிச்சைச் சாலைகளை சர்க்கார் அங்கீகரித்துள்ளதாம்.

கெஜட் பதிவில்லாத சர்க்கார் அதிகாரிகள், ரூ. 300-க்குக் குறைவாக வாங்கும் ஸ்தல ஸ்தாபன ஊழியர்கள் ஆகியோரும், அவர்களது குடும்பத்தினரும் சர்க்கார் மருத்துவ விடுதிகளில் சிகிச்சைக்காகச் சேர்ந்தால் அவர்களுக்கு விலை உயர்ந்த மருந்துகள் 'உணவு முதலியன யாவும் இலவசமாகவே அளிக்கப்பட்டு சிகிச்சை செய்யப்படுகிறது.

## மூவேந்தர் சின்னங்கள்

### சென்னை நகராண்மைக் கழகச் சின்னமாகின்றன

இதுவரையில், பிரிட்டிஷ் சின்னமொன்றைத் தாங்கியிருந்த தன்னுடைய விருதை—பட்டயத்தை உடனடியாகக் கைவிட்டு, தமிழகத்தின் பெருமைக்குரியதோர் சின்னமொன்றை மேற்கொள்ள சென்னை நகர சபை முடிவு செய்துள்ளது.

புதிய விருதுக்கு மேலே நகராண்மைக் கழகத்தின் மாளிகை தோற்றமளிக்கும்; உள் முகப்பில் சேர, சோழ, பாண்டியர்களின் வில்-அம்பு, புலி, மீன் சின்னங்கள் பொறிக்கப்பட்டிருக்கும்.

கர்நாடகக் கடற்கரையில் நகரம் அமைந்துள்ளது என்பதைக் குறிக்க, 17-ம் நூற்றாண்டில் கடலோரத்தில் ஈடுபட்டிருந்த தோணி ஒன்று சித்தரிக்கப்பட்டிருக்கும்.

## இரு மாவட்டங்களில் புதிய சர்க்கரை ஆலைகள்

வட ஆற்காடு மாவட்டத்திலும், கோயம்புத்தூர் மாவட்டத்திலும் கூட்டுறவு முறையில் சர்க்கரை உற்பத்தி ஆலைகளை ஆரம்பிக்க வேண்டுமென மாநில சர்க்கார் திட்டமிட்டுள்ளனர் என்றும், ஒவ்வொரு ஆலையிலும் ரூ. 20 லட்சம் வரையிலும் முதலீடு செய்ய வேண்டியிருக்குமென்றும், பெரும்பாலும் இத்தொகையை இந்திய சர்க்கார் கொடுத்துதவலாம் என எதிர்பார்க்கப்படுவதாகவும் கூறப்பட்டிருக்கிறது.

# சௌராஷ்டிர உப்பு ஜப்பானுக்கு ஏற்றுமதியாகிறது!

## ஆனால் தமிழ்நாட்டு உப்பு மலாயா போக மார்க்கமில்லை!

"ஈடன், இந்தியா, சயாம், சீனா ஆகிய நாடுகள் உப்பு உற்பத்தி செய்பவை; பல நாடுகளில் ஆகாரத்துக்காகவும், தோல் பதனிடுவதற்காகவும், மீன் வர்த்தகத்திற்காகவும், ஐஸ் கிரீம், சோப்பு வகையறாக்களுக்காகவும், தென்னைமர உரத்துக்காகவும் உப்புத் தேவைப்படுகிறது. வெறும் உப்புதானே என்று நினைக்க வேண்டாம்; அதில் பணம் இருக்கிறது.

"மலேயாவுக்கு உப்பு அதிகம் தேவை; ஆண்டு ஒன்றுக்கு சுமார் 70 ஆயிரம் டன் உப்பு இங்கு இறக்குமதி ஆகிறது. ஆனால், இந்தியாவிலிருந்து உப்பு இங்கு அதிகம் வரவில்லை. மலேயாவுக்கு வேண்டிய உப்பு, பெரும்பாலும் சயாமிலிருந்தே வருகிறது. இங்கு தேவைப்படுகிற 'டேபிள் சால்ட்' இங்கிலாந்திலிருந்து வருகிறது. என்ன வெட்கக்கேடு! உப்பு உற்பத்தி செய்கிற நாடுகள், 'டேபிள் சால்ட்' ஏற்றுமதி செய்யவில்லை!

"இந்தியாவின் உப்பு மலேயாவுக்கு ஏன் வரமுடியவில்லை? சயாம் உப்பைவிட இந்தியாவின் உப்பு 50 சதவிகிதம் விலை அதிகமாக இருக்கிறபடியால்தான், மற்ற நாட்டு உப்பு இங்கு எடுபடவில்லை என்று தெரிகிறது.

"இந்தியாவிலிருந்து ஜப்பானுக்கு ஏற்றுமதியாகிறது. சௌராஷ்டிரத்திலிருந்து ஜப்பானுக்கு உப்பு கப்பல் மூலமாக அனுப்ப விலை கட்டுகிறபோது, தூத்துக்குடியிலிருந்தும், சென்னையிலிருந்தும் அனுப்ப விலை கட்டவில்லை. ஏன்? கப்பல் கூலி அதிகமாக இருக்கிறது. இது ஒரு முக்கியமான காரணம்.

"ஜப்பானிய நாட்டு வர்த்தக முன்னேற்றத்தை ஆராயும்போது, ஜான் கர்தர் என்னும் நூலாசிரியர், 'அங்கு அரசாங்கத்தார், கப்பல் கூலிகளில் சலுகைகள் செய்து கொடுப்பதால், ஏற்றுமதி இறக்குமதி வியாபாரம் முன்னணியில் இருக்கிறது,' என்ற கருத்துப்பட எழுதி இருக்கிறார்.

"தென்னாட்டில், உப்பு உற்பத்தி அதிகமாக இருக்கிறது. ஏன், சென்னை அரசாங்கம், இந்தச் சலுகைகள் அளிக்கக்கூடாது?

"உப்பு ஏற்றுமதி விஷயத்தில், சென்னை அரசாங்கம், தென்னாட்டு உப்பு உற்பத்தியாளர்களுக்கு மிகுந்த உதவிகள் செய்யவேண்டும்; இந்தச் சூழ்நிலை ஏற்படுமானால், மலேயாவின் தேவைக்கு இந்தியாவிலிருந்து உப்பு அனுப்பலாம்."

குறிப்பு:— 28—7—55 'தமிழ்நாடு' இதழில், மலேயா கடிதப் பகுதியில் திரு. எஸ். வி. ஏ. அண்ணாமலை என்பவர், மேற்மேற்கண்டவாறு குறிப்பிட்டிருக்கிறார்.

## 20 போதனாமுறைப் பள்ளிகள்

### புதிதாகத் துவக்கப்படும்

சென்னை, ஜூலை 28—

வருகிற ஆகஸ்டு திங்கள் துவக்கத்திலிருந்து புதிதாக 20 போதனாமுறை பயிற்சிப் பள்ளிகளை ஆரம்பிக்க சென்னை சர்க்கார் அனுமதி அளித்துள்ளனராம். அவற்றுள் சர்க்கார் நேரடி நிர்வாகத்தின் கீழ் 17 பள்ளிகளும், சர்க்கார் நிதி உதவியுடன் கூடிய தனிப்பட்ட நிர்வாகத்தில் இருக்கும் பள்ளிகள் 3 ஆகவும் இருக்குமாம்.

இவற்றுள் 15 பள்ளிகள், ஆதாரக் கல்வி போதனாப் பயிற்சி பள்ளிகளாகவும், மற்ற ஐந்தும் சாதாரண போதனாமுறை பயிற்சி நிலையங்களாகவும் இருக்குமென்றும் தெரியவருகிறது.

மேற்கண்ட 20 பள்ளிகள் சம்பந்தமான செலவுத் தொகை, சிப்பந்திகள், போன்ற யாவும் அனுமதிக்கப்பட்டுள்ளன.

## குறைந்தபட்ச ஊதிய சட்டம்:

### காலவரம்பை ரத்து செய்ய புதிய மசோதா

புதுடில்லி, ஜூலை 28—

தொழில், விவசாயத் துறைகளில் வேலை செய்யும் ஏராளமான தொழிலாளர்கள் பிரச்சினையில் குறைந்தபட்ச ஊதியச் சட்டத்தை மாநில சர்க்கார்கள் அமுல் செய்ய அவகாசம் அளிப்பது குறித்து குறைந்தபட்ச ஊதியச் சட்டத்தைத் திருத்துவதற்கென, தற்போது நடைபெற்றுவரும் பாராளுமன்றக் கூட்டத்தில் ஒரு சட்டத் திருத்த மசோதா கொண்டுவரப்படலாம் என்று தெரியவருகிறது.

மேற்படி சட்டப்படி, மாநில சர்க்கார்கள் இவ்வாண்டு இறுதிக்குள்ளாகவே குறைந்தபட்ச ஊதியச் சட்டத்தை அமுல் செய்ய வேண்டும் என்று காலவரையறை செய்யப்பட்டிருக்கிறது; ஆனால், இத்திருத்த மசோதாவினால், அக்கால வரம்பு அறவே நீக்கப்பட்டுவிடும்; இதனால், அந்தந்த மாநில சர்க்கார்கள், தங்களுக்கு வசதிப்படுகிற காலத்தில் அச்சட்டத்தை அமுல் நடத்தலாம் என்று திருத்துவதே அம்மசோதாவின் நோக்கம் என்று கூறப்படுகிறது.

சட்டத்தை விரைவில் அமுல் நடத்த வேண்டுமென்பதற்காகவே தான் காலவரம்பு நிர்ணயிக்கப்பட்டதென்றும், ஆனால், செயல்முறையில் இந்த வரம்பை அடிக்கடி நீடிக்கவேண்டி நேரிட்டதால் அதைத் தவிர்க்கவே இத்திருத்த மசோதா கொண்டுவரப்பட இருக்கிறது என்றும் கூறப்பட்டுள்ளது.

## சென்னை டிராம்வே தொழில் தகராறு

### தீர்ப்பு ஒத்திவைப்பு

பம்பாய், ஜூலை 28—

சென்னை டிராம்வே நிர்வாகத்திற்கும் அதன் தொழிலாளர்களுக்குமிடையில் உள்ள தகராறில் தீர்ப்புக் கூறுவதை தொழில் தகராறு அப்பீல் மன்றத்தின் ஒரு தனிக் குழு, ஒத்திவைத்துள்ளது.

## ஐ. நா. குழந்தைகள் நிதிக்கு அமெரிக்க உதவி

ஐ. நா. குழந்தைகள் சகாய நிதியின் நிர்வாக டைரக்டரிடம் அமெரிக்காவின் ஐ. நா. பிரதிநிதி 10,68,815 டாலருக்கு ஒரு 'செக்' வழங்கினர்; இது ஐ. நா. குழந்தைகள் சகாய நிதிக்கு அமெரிக்கா இந்த ஆண்டு வழங்கும் இரண்டாவது தொகையாகும் 20,48,025 டாலராகிய முதலாவது தொகை மே 23-ந் தேதி கொடுக்கப்பட்டது; அதுவும், 1955-ம் ஆண்டுத் திட்டத்துக்கு அமெரிக்கா கொடுத்த பங்காகும்.

## புதுச்சேரி சட்டசபைத் தேர்தல் பட்டியல்

| மொத்த இடங்கள் | முடிவு அறிவிக்கப்பட்ட இடங்கள் | மொத்த வாக்காளர்கள் | பதிவான வாக்குகள் |
|---|---|---|---|
| 39 | 39 | 1,65,188 | 1,42,623 |

| கட்சி | போட்டியிட்ட இடங்கள் | வெற்றிபெற்ற இடங்கள் | மொத்தம் பெற்ற வாக்குகள் |
|---|---|---|---|
| மாவட்டக் காங்கிரஸ் | 38 | 20 | 55,682 |
| மக்கள் முன்னணி | 28 | 16 | 51,015 |
| தேசீய காங்கிரஸ் | 21 | ஒன்றுமில்லை | 18,127 |
| மாகி மகாஜன சபை | 3 | ஒன்றுமில்லை | 1,851 |
| சுயேச்சை | 22 | 3 | 15,948 |

தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள 20 மாவட்ட காங்கிரஸ் அபேட்சகர்களில் 3 பேர் போட்டியின்றி தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்.

# ‘தொழில் துறையில் தென்னிந்தியா ஒதுக்கப்பட்டிருக்கிறது’

## ‘தென்னகத்தில் ஒரு கல் தொலைவிற்குக்கூட புதிதாக இருப்புப் பாதை போடப்படவில்லை’

## ‘யூனியன் அரசாங்கத் தொழில் நிலையங்களில் வடவர் வெறி தாண்டவம்’

## ‘மத்திய அரசாங்கத் தொழிற்சாலைகளால் அம்மாநிலங்களுக்குப் பயனில்லை’

## ‘நிலைமையை ஆராய தென்னிந்திய மாநில அமைச்சர்கள் மாநாடு கூட்டப்படும்’

*இந்தியப் பேரரசின் ஓரவஞ்சனையை மைசூர் தொழில் அமைச்சர் சென்னபாசப்பா அம்பலப்படுத்துகிறார்*

மைசூர், ஜூலை 28—

“தொழில் வளர்ச்சித் திட்டங்களில், தென்னிந்தியா, இந்தியப் பேரரசால் ஒதுக்கித் தள்ளப்பட்டுக் கிடக்கிறது.’

“அரசியல் விடுதலை கிடைக்கப்பெற்ற நாளிலிருந்து, தென்னிந்தியாவில், ஒரு கல் தொலைவிற்குக் கூட புது புகைவண்டிப் பாதை போடப்படவில்லை.

“இந்தியப் பேரரசின் நேரடித் தொடர்பில் இங்கு மைசூர் மாநிலம், துவங்கி நடத்தப்பட்டுவரும் தொழில் நிறுவனங்களில், பணி புரிய தொழிலாளர்களைத் தேர்ந்தெடுப்பதில், அந்த நிறுவனங்களின் நிர்வாகிகள், மாகாண வெறியைக் கையாளுகின்றனர்.

“இந்தத் தொழில்கள் இங்கு துவங்கப்பட்டதின் விளைவாக (மைசூர்) இம்மாநிலம் நலம் பெறுவதற்குப் பதிலாக, குடியிருப்பு ஏற்பாடு, குடிநீர் வசதி, சுகாதாரம் போன்றவைகளைக் கவனித்துக் கொள்ளவேண்டிய புதிய தொல்லையே ஏற்பட்டிருக்கிறது.

“உண்மையில் கூறவேண்டுமானால், இத்தொழில் நிறுவனங்கள் மைசூர் மாநிலத்தில் துவங்கப்பட்டவை அல்ல என்றே நாம் கருதும் நிலையைப் பெற்றுவிட்டிருக்கிறோம்.

“இந்தொழில்களை இங்கு துவங்குவதற்கான மூலதன உதவியையும், மற்ற வசதிகளையும் மைசூர் அரசாங்கம் செய்திருந்துங்கூட, அவைகளின் நிர்வாக உரிமையில் நமக்குத் துளியும் பங்கு கிடையாது.

“இந்துஸ்தான் ஆகாய விமானத் தொழிற்சாலையிலும் இந்தியன் டெலிபோன் தொழில் நிலையத்திலும், மைசூர் அரசாங்க சார்பில் இடப்பட்டுள்ள ரூ. 90 லட்சம் மூலதனத்தைத் திரும்பப் பெற்றுக்கொள்ள நாங்கள் யோசித்து வருகிறோம்.

*—இக்கருத்தை, காங்கிரஸ் ஊழியர் கூட்டத்தில், மைசூர் தொழில்துறை அமைச்சர் எச். எம். சென்ன பாசப்பா மனம் குழம்பி கூறியிருக்கிறார்.*

“நாட்டின் இப்(தென்னிந்திய) பகுதியின் தொழில், வர்த்தகம், போக்குவரத்து ஆகியவற்றின் அபிவிருத்தியில் இந்தியப் பேரரசு கருத்தைச் செலுத்தவில்லை” என்பதற்காக, காங்கிரஸ் ஊழியர்கள், தங்கள் ‘ஏமாற்றத்தை’த் தெரிவித்தனர்.

“தென்னிந்தியாவை உகந்த முறையில் அபிவிருத்தி செய்யுமாறு இந்தியப் பேரரசைக் கட்டாயப்படுத்துவதற்காக தென்னிந்திய மாநிலங்களைச் சேர்ந்த அமைச்சர்கள் அனைவரையும் கொண்ட ஒரு மாநாட்டைக் கூட்டும் ஏற்பாடு இருந்துவருகிறது.”

*—இக்கருத்தையும், அதே அமைச்சர்தான் அக்காங்கிரஸ் ஊழியர் கூட்டத்தில் அறிவித்துள்ளார்.*

*மேலும் அவர் பேசும்பொழுது’ சிமெண்ட், புகையற்ற வெடி மருந்து, பழம் பக்குவப்படுத்துதல், பிலிம் ஆகிய வகையில் தொழிற்சாலை நிறுவ மைசூர் அரசாங்கம் தீவிரமாக யோசித்துக்கொண்டு இருப்பதாகவும், பெல்லாரி, சித்தல்துர்க் மாவட்டங்களில் கெந்தகப் படிவம் கண்டுபிடிக்கப்பட்டிருப்பதாகவும், கெந்தகம் அதிகம் இடைக்கக் கூடும் என அறிய வந்தால், மைசூர் அருகாமையில் பெலகோலாவில் மூடப்பட்டுக் கிடக்கும் சாய உற்பத்திச்சாலையை மீண்டும் துவங்க எண்ணியிருப்பதாகவும் குறிப்பிட்டார்.*

*செல்வாக்குப் படைத்த காங்கிரஸ் கட்சியினருக்குச் சார்பாக அரசாங்க அதிகாரிகள் இருந்துவருவதாகவும், அச்சத்திற்கு இடங்கொடாமல் அதிகாரிகள் தங்கள் கடமையைச்செய்ய முன்வரவேண்டும் என்றும் காங்கிரஸ் ஊழியர் குறிப்பிட்டனர்.*

“மைசூரில் உள்ள இரயில் தொழிற்சாலையிலும், மற்ற தொழில் நிறுவனங்களிலும் மைசூர் மக்களையே அதிகமாக அமர்த்தவேண்டும்” என்றும், காங்கிரஸ் ஊழியர்கள் கோரினர்.

---

### டிக்கட்டின்றி பிரயாணம்

### 979 பேர் 4 நாட்களில் பிடிபட்டனர்

*கடந்த நான்கு நாட்களில், சென்னை கடற்கரை, தாம்பரம் நிலையங்களிடையே மின்சார ரயிலில் டிக்கட்டின்றி பிரயாணம் செய்த 979 பிரயாணிகள் பிடிக்கப்பட்டனர்.*

*இவர்களில் 846 பேர், பிரயாணத்திற்கான கட்டணத்தை உபரிக் கட்டண விதிப்புடன்சேர்த்துக் கட்டிவிட்டனர். எஞ்சிய 130 பேர் எழும்பூர் இரயில்வே கௌரவ நீதிபதியால், ரூ 5 முதல் 10 வரை அபராதம் விதிக்கப்பட்டனர்.*

*6 பேர்கள் பிறிதொருவருக்குச் சொந்தமான சீசன் டிக்கட்டுகளை உபயோகித்தவர்கள் என்று கூறப்படுகிறது.*

---

### சென்னையில் 144 தடை உத்தரவு

### இரண்டு நாட்களுக்கு அமுலில் இருக்கும்

*சென்னை, ஜூலை 29—*

*சென்னை நகரில், ஜூலை 31, ஆகஸ்டு 1-ந் தேதிகளில், கி. பு. கோ. 144-ம் பிரிவின் கீழ், சென்னை நகர போலீஸ் கமிஷனர் தடையுத்தரவு பிறப்பித்திருக்கிறார்.*

*இந்த உத்தரவின்படி, ஐந்து பேர்களும் அதற்கு மேற்பட்டவர்களும் கூட்டமாகக் கூடக்கூடாது; எந்தவித ஆர்ப்பாட்டம், ஊர்வலம், பொதுக்கூட்டமோ நடத்தக் கூடாது; கோரிக்கைகளை விளக்கும் தட்டிகள், கட்சிகளின் கொடிகள் முதலியனவற்றை எடுத்துக் கொண்டு வரலாகாது.*

---

### செஞ்சீனவுக்கு பிரெஞ்சு தூதுக் குழு

*பாரீஸ், ஜூலை 21—*

*செஞ்சீனவுக்கு ஒரு தூதுக் குழு அனுப்புமாறு, பீகிங் கல்விக் கழகம் அனுப்பியிருந்த அழைப்பை, பிரெஞ்சு தேசீய சட்ட சபை எற்றுக்கொண்டுவிட்டதாகத் தெரிகிறது.*

*சீனவுக்கு ஒரு தூதுக் குழு அனுப்புவதென, பிரெஞ்சு தேசீய சட்டசபையின் வெளிவிவகார குழு இன்று தீர்மானித்திருக்கிறது.*

*செப்டம்பர் இறுதியில் பிரெஞ்சு தூதுக் குழு பீகிங் செல்லுமென்று தெரிகிறது.*

*சீன சர்க்காரை பிரான்ஸ் இன்னும் அங்கீகரிக்கவில்லை.*

---

### அமெரிக்க உதவித் தலைவர் ரஷ்யா செல்வார்?

*வாஷிங்டன், ஜூலை 28—*

*ரஷ்யத் தலைவர்கள் அமெரிக்காவுக்கு வருகை தருவதை தாங்கள் ஆதரிப்பதாகவும், அமெரிக்க உதவிக் குடியரசுத் தலைவர் நிக்சன், ரஷ்யா செல்லக்கூடும் என்றும் அமெரிக்க ‘செனேட்’ வெளிநாட்டு உறவுக் குழுவில் உள்ள இரண்டு பிரபல உறுப்பினர்கள் கூறினராம்.*

---

### ஆசாத் ரஷ்யா செல்வார்

*புதுடில்லி, ஜூலை 29—*

*இந்திய சர்க்கார் கல்வி மந்திரி மௌலானா அபுல்கலாம் ஆசாத், செப்டம்பர், அல்லது அடுத்த ஏப்ரலில், சோவியத் ரஷ்யாவிற்குச் செல்வார். இன்று நிருபர்கள் கூட்டத்தில் அவரே அத்தகவலை வெளியிட்டிருக்கிறார்.*

---

## பெரியார் போராட்டம் வாபஸ்.....

*[1-ம் பக்கத்தின் தொடர்ச்சி]*

“அரசியல் சட்டத்தின்படி, இந்தி மொழி இந்திய சர்க்காரின் அரசாங்க மொழியாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருப்பதினாலேயே, வட்டார மொழிகளின் சுதந்திரமான முழு அபிவிருத்திக்கு வழி இல்லை, இருக்காது—என்பதல்ல;

“இந்த மொழிப் பிரச்சினை குறித்து சென்னை சர்க்கார் நன்கு அறிந்தே இருக்கின்றனர்;

“தமிழ் மொழி இந்த மாநிலத்தின், கல்வி, நிர்வாகத் துறைகளில் தனக்குரிய இடத்தைப் பெறவேண்டும் என்பதில், வேறு எவருக்கும் குறைந்த கவலையுடையதல்ல சென்னை சர்க்கார்;

“இந்தி மொழி பேசாத மக்களின் நலன்களுக்குக் குந்தகம் விளைவிக்கும் வகையில், இந்திய சர்க்காரோ, மாநில சர்க்காரோ எந்தவித நடவடிக்கையினையும் மேற்கொள்ளமாட்டார்கள் என்று நான் உறுதி கூறுகிறேன்.”

### வேண்டுகோள்

“நான் இப்போது தெரிவித்திருப்பதை ஒட்டி, திராவிடர் கழகத் தலைவர் திரு. ஈ. வே. ரா அவர்களும், அவரது தோழர்களும் தாங்கள் ஆகஸ்டு முதல் தேதி நடத்த திட்டமிட்டிருக்கிற கொடி கொளுத்தும் முயற்சியைக் கைவிட்டு விடுவார்கள் என்று மனதார நம்புகிறேன்.”

### மிரட்டல்

‘தேசீயக் கொடி, தேச கௌரவத்தின் சின்னமாகும்;

“அதைக் கொளுத்துவதையோ, அன்றி வேறு வகையில் அவமதிப்பதையோ எந்த ஒரு சர்க்காரும் பார்த்துக்கொண்டிருக்க முடியாது;

“எனது வேண்டுகோளையும்மீறி, எதிர்ப்பாளர்கள் துரதிருஷ்டவசமாக தேசீயக் கொடியைக் கொளுத்தவோ, அன்றி வேறெந்தவித அவமதிப்பிற்குள்ளாக்கவோ முற்பட்டால் நான் தெளிவாகச் சொல்ல விரும்புகிறேன்—அந்த முயற்சியைத் தடுக்க சர்க்கார் எல்லா வகையான நடவடிக்கைகளை மேற்கொள்ளுவதுடன், அந்த முயற்சியிலீடுபடுவோர் மீது கடுமையான நடவடிக்கை எடுக்க வேண்டிய அவசியத்திற்காளாவர்.”

*இவ்வகையிலே அறிக்கை இருக்கிறது.*

*(ஆகஸ்டுப் போராட்ட வாபஸ் பற்றி, பலருடைய கருத்துரைகள், நமக்குக் கிடைத்துள்ளன; வசதிப்படும்போது வெளியிடலாம் என்பதாக எண்ணிக் கொண்டிருக்கிறோம்.*

*(ஆ • ர்.)*

---

### கழகக் கூட்டம்

31—7—55 *அன்று, பல்லடம், பொங்காளி அம்மன் கோயிலில், தோழர் பி. நல்லசாமி தலைமையில் நடைபெறும். தோழர்கள் சி. டி. தெண்டபாணி, பி. எம். பொன்னுசாமி ஆகியோர் பேசுவர்.*

### திருவள்ளுவர் நினைவு நாள்

31—7—55 *காலை* $9\frac{1}{2}$ *மணிக்கு, சென்னை — சூளை, மாணிக்கச் செட்டித் தெருவிலுள்ள நகர இளைஞர் கழகத்தில், திரு. இரா. சொக்கலிங்கனார் தலைமையில், ‘வள்ளுவர் வகுத்த நெறி’ என்பது பற்றி திரு. நா. இராசகோபாலன் பேசுவார்.*

### சொற்போர்

31—7—55 *காலை 9 மணிக்கு, திருச்சி, திருமண மாளிகையில், (சின்னசெட்டி தெரு) பாண்டியன் படிப்பகச் சார்பில், ‘திராவிடமா? தமிழகமா?’ என்னும் பொருள் பற்றி சொற்போர் நடைபெறும். நடுவர்கள்: தோழர்கள் அன்பில் தர்மலிங்கம், குலசேகரனர், பரிமணம், தயாளச்சாமி, தி. ரா. தருமராசன். பரிசு வழங்குபவர்: தோழர் க. அன்பழகன்.*

### வண்ணை கே. எஸ். பாண்டியன் பகுத்தறிவுப் படிப்பக செயற்குழு உறுப்பினர்கட்கு

31—7—55 *இரவு 9 மணிக்கு, சென்னை, வண்ணை கே. எஸ். பாண்டியன் பகுத்தறிவுப படிப்பக செயற்குழுக் கூட்டம், கழகப் பணிமனையில், தோழர் எம். துரைசாமி தலைமையில் நடைபெறும்.*

---

## கள்ளச் சாரயத்தால்...

*(1-ம் பக்கத்தின் தொடர்ச்சி)*

*ஆகிய ஐந்தும், மதுவிலக்கை வெற்றிகரமாக அமுல் செய்வதற்குத் தடைகளாக உள்ளன’ என ஆந்திர அரசாங்க அறிக்கை சுட்டிக்காட்டி இருக்கிறது.*

*கள்ளச்சாராயத் தயாரிப்புத்தான், மதுவிலக்குச் சட்டத்தைத் தீவிரமாகச் செயலாற்றுவதற்குக் காரணமாகும் எனவும், அப்படி இருந்துங்கூட ஒவ்வொரு ஆண்டும் கள்ளச்சாராயத் தயாரிப்பு பெருகிக் கொண்டு இருக்கிறது என்றும், அந்த அறிக்கை அறிவிக்கிறது.*

*‘மதுவிலக்கை அமுல் செய்யும் போலீஸ் துறையினர் பலரும் மதுப்பழக்கமுடையவர்களாக இருந்து வருகின்றனர்’ என்று சட்டசபை உறுப்பினர்களில் சிலர் எடுத்துக்காட்டியுள்ளனர்.*

---

### ‘சட்ட சபை காங்கிரஸ் உறுப்பினர்களை கூட்டுக’

### பஞ்சாப் காங்கிரசார் கோரிக்கை

*சட்ட சபை காங்கிரஸ் கட்சி உறுப்பினர் கூட்டத்தைக் கூட்டுமாறு 41 பஞ்சாப் காங்கிரஸ் சட்ட சபை உறுப்பினர்கள், தலைவர் பீமசேன் சச்சாரிடம் மனு தந்து இருக்கின்றனர்.*

*இந்த மனு திரும்பப்பெறப் பட்டதாகக் கூறப்பட்டது தவறென்றும், இன்னும் திரும்பப் பெறப்படவில்லை என்றும் கூறப்படுகிறது.*

*எல்லா மந்திரிகளும் இருந்த கூட்டமொன்றில், மொழிவழி மாநிலக் கோரிக்கைக்கு உரிமைக் குரல் எழுப்புவதற்கு விதிக்கப்பட்டிருந்த தடையை நீக்கியதின் விளைவாக எழுந்துள்ள நிலை குறித்து விவாதிக்கப்பட்டதாகத் தெரிகிறது.*

*மாவட்ட அதிகாரிகளின் ஆலோசனையின் பேரில், கைது செய்யப்பட்டுள்ள அகாலிகளை விடுதலை செய்வது பற்றி ஆலோசிக்கப் பட்டதாகக் கூறப்படுகிறது*

---

*திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம். ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப் பெற்று, (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம். ஏ.*

